திருவள்ளுவராண்டு 2037
புரட்டாசி - செப்டம்பர் 2006

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சிவ சிவ

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன

குரு பூசை விழா




சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

### சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | |
|---|---|
| திருவள்ளுவராண்டு 2037 (விய) | மாதம் : புரட்டாசி |
| மலர் : 20 | இதழ் : 9 |




# பேரறிஞர் அண்ணாவின் பாதையில் பயணம் செய்வோம்!

கோடிக்கணக்கான மக்களின் மந்திரச்சொல் "அண்ணா" "அண்ணா", "அண்ணா." பொதுவாழ்வில் ஒரு மகத்தான தலைவராகவும், தங்களின் சொந்த அண்ணனாகவும் எண்ணிப் பார்க்கும் ஒரு புதிய மரபு, உலக அரசியலில் எங்கும் காணாத வகையில் அண்ணாவின் வருகைக்குப் பிறகு தான் அரசியல் உலகில் தோன்றியது!

சாமானியராய்ப் பிறந்து, சாமானியர்களின் அண்ணனாய் வளர்ந்து, சாமானியர்களின் தலைவராய் உயர்ந்த வரலாறு தான் அண்ணாவின் வரலாறு! இந்தியாவின் சுதந்திர வேள்வித்தீ சுடர்விட்டு - கொளுந்து விட்டு எரிகின்ற பொழுது, எரியும் நெருப்பின் நடுவே கருமை மறைந்திருப்பது போல் சனாதனம் பதுங்கி இருந்தது. இதைப் புரிந்து கொண்ட தந்தை பெரியார் தேசத்தின் விடுதலையோடு, சமூகத்தின் விடுதலையும் கட்டாயம் என்று சமுதாய சீர்திருத்தத்தினை உயர்த்திப் பிடித்தார்!

மண்ணின் விடுதலை என்பது மக்களின் விடுதலையும் சேர்ந்தது தான்! அடிமைத்தளையை அறுத்து எறிவது ஆட்சி அமைப்பில் மாத்திரம் அல்ல, சமூக அமைப்பிலும்தான்! இந்திய விடுதலையை உரக்க உச்சரிக்கின்ற அதே நேரத்தில், சமுதாய விடுதலையும் உரக்க உச்சரிக்கப்பட வேண்டும் என்பதைத் தெளிவாய், தீர்க்கதரிசனமாய் உணர்ந்திருந்தார் பேரறிஞர் அண்ணா!

*ஆலை அரசுகள்*
*சோலை மிராசுகள்*
*பாலில் மிதந்தது போதும்! - இங்கு*

*வேலை இழந்தவர்*
*வீதி முனைகளில்*
*கூழுக்கு அலைவதைப் பாரும்! - அந்தக்*
*கூட்டத்தை ஓர் அணி சேரும்!*

என்ற கவி அரசரின் வைரவரிகளுக்கு ஏற்ப, மிட்டா, மிராசுகளின் பீடமாய் இருந்த நீதிக்கட்சியை, ஏழை எளிய அடித்தளத்து சாமானிய மக்களின் இயக்கமாய், சமுதாய விழிப்புணர்வு இயக்கமாய் மாற்றிக் காட்டினார்.

மன்னர்களின் ஆட்சி மறைந்துவிட்டது! வெள்ளையர் ஆட்சி விடைபெற்றுவிட்டது! மக்களின் ஆட்சி மலர்ந்துவிட்டது! எல்லோரும் ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் என்று ஆனந்தக் கூத்தாடினோம்! ஒடுக்கப்பட்ட மக்கள் உயரவேண்டும், தாழ்த்தப்பட்ட மக்கள் தலைநிமிர வேண்டும் மறுக்கப்பட்ட மனித உரிமைகள் பெறப்பட வேண்டும் என்ற நோக்கில் தான் மேடு பள்ளம் நிறைந்த மனித சமூகக் கட்டமைப்பை, சமத்துவமாய் நிலை நாட்டும் உயர்ந்த இலட்சியத்தில் உலக மனித உரிமைகளின் விடிவெள்ளியாய் விளங்கும் ஒப்பற்ற அரசியலில் சட்டமேதை டாக்டர். அம்பேத்கார் இந்தியாவின் அரசியல் நிர்ணய சட்டத்தை வழங்கினார்!

நடைமுறை வாழ்வில் பழக்க வழக்கம் என்ற பெயரில் அவ்வப்பொழுது வர்ணாசிரமம் தன் கோரமுகம் காட்டி சிரித்துக் கொண்டு இருக்கின்றது.

*"மாதர்ப்பிறைக் கண்ணியானை*
*மலையான் மகளொடும் பாடிப்*
*போதொடு நீர்சுமந் தேத்திப்*
*புகுவார் அவர்பின் புகுவேன்!"*

என்ற அப்பரடிகள் திருவாக்குக்கு மாறாகச் சான்றாண்மையும், சீலமும், பக்தியும் உடையோர் இறைவன் திருமேனியைத் தீண்டி வழிபடத் தடை விதித்திருக்கின்றது! ஊனும் உயிரும் உருக்கும் தேன்மொழியாகிய திருவாசகம் இறைவனின் திருச்செவிகளுக்கு ஓதத்தடை விதிக்கின்றது! இந்தத் தடைகள் எல்லாம் என்றைக்கு விடைபெறும்? என்று காலம் உரக்கக் கூவிக்கொண்டிருக்கிறது!

ஒரு காலத்தில் கக்கும் புகையும், கூச்சலுமாய் கன்னியைத் (பெண்ணை) தானம் செய்யும் வைதீகச் சடங்குத் திருமணம் மட்டுமே

திருமணம் என்ற சட்ட அந்தஸ்தை பெற்றிருந்தது. களவு ஒழுக்கத்தோடும் கற்பு ஒழுக்கத்தோடும் வாழ்ந்த தமிழர் அகவாழ்க்கையின் முதிர்ந்த வெளிப்பாடாக மனங்கள் கனிந்து இணைந்து தக்க பெரியோர்கள், சான்றோர்கள் முன்னிலையில் மாலைகள் மாற்றிக்கொள்ளும், தமிழர் தன்மானம் காக்கும் திருமணங்கள் திருமணம் என்ற தகுதியைப் பெறாத காலம் ஒன்று இருந்தது. சடங்குமுறையில் நிகழாத திருமணம் என்றால் சட்டத் தகுதியையும் பெறாது என்ற சமூகக் கொடுமை ஒரு காலத்தில் இருந்தது. தடைகளைத் தாண்டியும், தமிழர் தன்மானம் காக்கும் திருமணங்களை, தமிழ்த் திருமணங்களாய், சுயமரியாதைத் திருமணங்களாய், மக்கள் கூட்டம் கூட்டமாய் நிகழ்த்தினர். சடங்கு வழியில் நிகழாத சுயமரியாதைத் திருமணம் சட்ட அங்கீகாரம் பெறாத காலத்தில், மக்கள் கூட்டம் கூட்டமாய் சுயமரியாதை திருமணங்களை எழுச்சியுடன் நிகழ்த்தினர்.

சுயமரியாதைத் திருமணம் செய்துகொண்டோர், பட்டியலும், புகைப்படங்களும் வெளியிடப்பட்டன. இந்த மகத்தான மக்களின் எழுச்சிக்கு வித்திட்டவர்கள் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, முத்தமிழறிஞர் டாக்டர் கலைஞர் ஆகியோர் ஆவார்கள்.

அண்ணா ஆட்சி பொறுப்பு ஏற்றதும் 1967–சூலைத் திங்கள் 17–ம் நாள் சுயமரியாதைத் திருமணத்தைச் சட்டபூர்வத் திருமணங்களாய் ஏற்றுக்கொள்ளும் வகையில் தமிழ்நாடு சட்டமன்றத்தில் சட்டவரைவு தாக்கல் செய்தார். மக்கள் இயக்கமாய் மலர்ந்த சுயமரியாதைத் திருமணங்கள், சட்டபூர்வத் திருமணங்களாக அங்கீகரிக்கப்பட்டன.

காந்தி அடிகளின் தலைமையில் விடுதலைப் போராட்டத்தை மக்கள் இயக்கமாய் மாற்றி வெற்றிகண்டார். தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, முத்தமிழறிஞர் கலைஞர் ஆகியோர் சமூக விடுதலைப் போராட்டத்தை மக்கள் இயக்கமாய் மாற்றி வெற்றிகண்டனர்; எந்த ஒரு கருத்தும், சிந்தனையும் மக்கள் மன்றத்தில் வலிமை பெறுகின்ற பொழுது வென்றே தீரும் என்பது காலத்தின் கட்டாயம். மக்கள் மன்றத்தில் வெற்றிகண்ட சுயமரியாதைத் திருமணங்கள் சட்ட வடிவில் வெற்றி பெற்றன, அதற்கு ஓர் வரலாற்றுச் சான்று! எந்தச் சிந்தனையையும் மக்கள் மன்றத்தில் வெற்றி பெறச் செய்ததே பேரறிஞர் அண்ணா காட்டிய பாதை! சமுதாயத் தளத்தில் மனித சமத்துவத்தை நிலைநாட்ட – அண்ணா காட்டிய பாதையில் நாளும் பயணம் செய்வோம்!

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 67. வினைத்திட்பம்

தூய்மை மட்டும் போதாது, திண்மை (உறுதி) தேவை. திண்மை இல்லாத தூய்மை சோர்வுபடும். அல்லது தோல்விகளும் துன்பங்களும் வந்துழி எடுத்துக்கொண்ட பணிகளைக் கைவிட்டு விடுவர் அல்லது ஆற்றாமை காரணமாகச் சோம்பலின் வயப்படுவர். திண்மைதான் தூய்மையைக் கூடக் காப்பது. செய்யும் பணிகளில் வெற்றி தோல்விகளைப் பாராட்டாது. பெருமை சிறுமை பாராது புகழ்வழி நோக்காது செய்தற்குரிய மனத்திண்மை வேண்டும். தூய்மையான - மனித நேயமிக்க பணி என்ற வினைத்தூய்மையிருப்பதால் அச்சம் ஏன்? துணிந்து தொழிற்படுதல் வேண்டும் என்று வலியுறுத்தவே "வினைத்தூய்மை" யைத் தொடர்ந்து "வினைத்திட்பம்" கூறினார்.

இன்றைய இடர்ப்பாடுகளுக்கெல்லாம் காரணம், வினை செய்வார் இலர் என்பதன்று. வினைத்தூய்மை இன்மையும் காரணமன்று. வினைத்திட்பம் இன்மையே என்பதறிக.

*வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்*
*மற்றைய எல்லாம் பிற. (661)*

செயலில் உறுதியென்பது ஒருவனுடைய (செயல் செய்பவனுடைய) மன உறுதியேயாம். மனத்திட்பத்தை ஒழிந்த பிறவெல்லாம் இருந்தாலும் பயனில்லை.

"மற்றைய எல்லாம் பிற" என்றது அறிவுடைமை முதலியன.

எந்த ஒரு பணிக்கும் உடன்படாதார் ஓராயிரம் பேர் இருக்கவே செய்வர். இஃது உலகியற்கை. இங்ஙனம் இருப்பது அவர்களுடைய பழக்க வாசனை. அவர்களின் எதிர்ப்பு முதலியவற்றைக் கண்டு அஞ்சாது மனித நேயமிக்க செயல்களை மன உறுதியுடன் செய்தல் வேண்டும்.

காங்கிரசு (இ) 1989 நாடாளுமன்றத் தேர்தலின் பொழுது மனித நேயமிக்கதும், அது நூறாண்டுகளுக்கும் மேலாகப் போற்றி வளர்த்ததுமாகிய சமயச் சார்பின்மையை இந்து வெறியர்களுக்கு அஞ்சிக் கைவிட்டது; அதனால் தோற்றது. இது மனத்திட்பம் இன்மைக்குச் சான்று.

*ஊறுஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்*
*ஆறுஎன்பர் ஆய்ந்தவர் கோள். (662)*

ஆராய்ந்து அறிந்த அறிஞர்கள் பயன்படும் பழுதிலாப் பணிகளையே செய்க என்றும், பயனிலாத பழுதுபடும் செயல்களைச் செய்யற்க என்றும் கூறுவர். ஒரோ வழி பழுதுபடும் செயல்களைச் செய்ய முனைந்துவிட்டாலும் அதனை இடையில் நிறுத்தாது பயனுடையதாக அமையத்தக்க வகையில் செய்க என்றும் கூறுவர்.

எச்செயலும் பயனுடையதாக அமைதல் வேண்டும் என்பது ஆசிரியர் குறிக்கோள். "பலனில் பற்றின்றிச் செய்க" என்ற ஆன்றோர் வாக்குடன் முரண்பாடுடையது ஆகாதோ எனின் இல்லை. இங்குப் பலன் என்றது தற்சார்பான பலனேயாம்.

*கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்கொட்கின்*
*எற்றா விழுமந் தரும். (663)*

செய்யப்பெறும் பணிகள் அச்செயலின் முடிவில், மற்றவர் அறியத்தக்க வகையில் செய்தல் மனத்திட்பம். அங்ஙனமின்றி இடையிலேயே வெளிப்படின் அச்செயல் நீங்காத் துன்பத்தைத் தரும்.
உரையாசிரியர்கள் பலரும் இந்தக் குறளுக்குப் போரொடு தொடர்புபடுத்திக் குறிப்பு எழுதியுள்ளனர். ஆனாலும் இது சாதாரண மனிதனின் அன்றாட வாழ்க்கைக்கும் பொருந்தும்.

*சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்*
*சொல்லிய வண்ணம் செயல். (664)*

செயல்கள் - செயல்களைச் செய்யும் முறைமை பற்றிச் சொல்லுதல் எல்லோர்க்கும் எளிதாம். ஆனால், சொல்லிய வண்ணம் செய்தல் அரிது.

இன்று, மனித நேயம் சோசலிசம் முதலியன பற்றி நிறையச் சொல்லுகிறார்கள். ஆனால் காரியத்தில் காணமுடியவில்லை.

*வீறுஎய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்*
*ஊறுஎய்தி உள்ளப் படும். (665)*

எண்ணங்களாலும் பிற சிறப்புக்களாலும் பெருமை பெற்றவர்களின் செயல் துணிவு, அரசராலும் நினைக்கப்பெறும்.

தொடக்கத்தில் கேளாது, பின் தியூழ் வந்துழி நல்லமைச்சரின் பெருமை நினைக்கப்படும் என்றார்.

*எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்*
*திண்ணியர் ஆகப் பெறின். (666)*

ஒருவர்தாம் எண்ணியவற்றையெல்லாம் எண்ணியவாறே அடைவர், எண்ணியவர் உறுதியுடன் கடைப்பிடியுடையராக இருப்பின்.

"திண்மை" - முயற்சியின்பாற்பட்டது. திண்மையிலாதார் எண்ணுவதிலும் கூட ஒரு தன்மைத்தாக எண்ணார் என்பதூஉம் அறிக.

*உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு*
*அச்சாணி அன்னார் உடைத்து. (667)*

உருவத்தின் சிறுமை கண்டு இகழ்தலைத் தவிர்த்திடுக. உருண்டு ஓடும் தேருக்கு அதன் சிறிய அச்சாணி ஓட்டத்திற்குத் துணை. அதுபோல்வாரை உடையது உலகம்.

அச்சாணி, தேரின் சக்கரம் கழன்றுவிடாமல் பாதுகாப்பதுடன் தேர்ச் சக்கரத்தின் உருளலுக்கும் துணை செய்கிறது. தேரின் அச்சாணி உருவத்தில் சிறியதாயினும் திண்மையுடையது.

*கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது*
*தூக்கம் கடிந்து செயல். (668)*

தெளிந்த அறிவினால் தேர்ந்தெடுத்த பணியினைச் செய்யும் பொழுது மனம் சலியாதும் காலம் நீட்டிக்காமலும் உடனே செய்ய வேண்டும்.

பணியிடையில் எதிர்ப்புகள், தோல்விகள், இழப்புகள் வரக்கூடும் இவற்றால் மனம் சலித்தல் கூடாது. எதிர்ப்புகள், தோல்விகள், இழப்புகள் பணியினால் வருபவையல்ல. பணிகளைச் செய்வோரின் அணுகுமுறையால் வருபவையேயாம்.

ஒரு பணிக்குரிய காலம் தொடர்ந்து இருத்தல் இயலாது. காலம் மாறுபடலாம். பணியின் தன்மையும் பயனும் மாறுபடலாம். ஆதலால் காலம் நீட்டித்தல் கூடாது.

*துன்பம் உறவரினும் செய்க துணிவுஆற்றி*
*இன்பம் பயக்கும் வினை.* (669)

துன்பமே வந்து உறுத்தினாலும் துணிவுடன் இன்பம் தரும் செயல்களைச் செய்க.

"இன்பம் பயக்கும் எனின் என்றும் பாடம் உண்டு. முன்பே எண்ணித் துணிக" என்று கூறியுள்ளதால் ஈண்டு எண்ணித் துணிந்த பணி இன்பம் பயக்கும் என்ற ஒருதலையான முடிவுக்குப் பிறகு தொடங்கிய பணியாக இருப்பதே முறையாதலின் "இன்பம் பயக்கும் வினை" என்ற பாடமே சரியானது.

எந்த ஒரு பணியும் தொடக்கத்தில் துன்பம் தருதலே இயற்கை போதிய பட்டறிவு இன்மையாலும், சுற்றுப்புறச் சூழ்நிலைகள் தகுதிப்படாததாக இருப்பதனாலும் துன்பம் வரும். காலப்போக்கில்தான் எந்த ஒரு பணியும் இன்பம் தர இயலும். சில பணிகள் ஒரு தலைமுறை கடந்தும் கூட இன்பம் தரலாம். இன்பம் தராமலும் போகலாம். ஆனால் இன்பம் தராது போனாலும் துன்பத்தின் தாக்கத்தைக் குறைத்திருக்கும் என்பதை அறிக.

*எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்*
*வேண்டாரை வேண்டாது உலகு* (670)

எந்த வகையான உறுதிகளை ஒருவர் அடைந்திருந்தாலும் செய்யும் செயலில் உறுதியில்லாதாரை உலகம் விரும்பாது.

உறுதிப்பாடுடைமைக்குச் சான்று, செயலிற் காட்டும் உறுதியே என்பது பெறப்பட்டது.

(தொடரும்)

**"உனக்குத் தெரியாததைத் தெரியாதென்று**
**ஒத்துக் கொள்வதற்குப் பெயர்தான் அறிவு".**
**-கன்பூசியஸ்**

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "கம்பன் என்றொரு மானிடன்"

(தமிழாகரர்.பேராசிரியர்.**சாமி. தியாகராசன்**)

மிதிலை வீதியில் சென்ற இராமனும் கன்னி மாடத்தில் நின்ற சீதையும்

"பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாள்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினார்"

-என்கின்றான் கம்பன்

இவ்வாறு மாறிப் புகுந்த இதயத்தோடு தன் சிந்தையையும் சீதையிடத்து விட்டுவிட்டு இராமன் முனிவனுடன் சென்று விடுகின்றான். இப்பால் இராமனை நினைத்துக் காதல் நோயால் சீதை வருந்துகின்றாள். அப்போது மாலைக்காலம் வருகின்றது. வருகின்ற மாலைப் பொழுதைத் தன் உயிர் உண்ணவரும் கூற்றாகக் காணுகின்றாள் சீதை. கூற்றுவன் என்று சொல்லும்போதே அவனிடத்து உள்ள கால பாசம் கதை முதலான உயிர் உண்ணும் கருவிகள் உடன் தோன்றும் அல்லவா? அதைப் போன்றே இங்கே "மாலைக் காலமாகிய கூற்றுவன் தன்னிடத்து உள்ள தென்றலாகிய வேலை, குளிர்ச்சி பொருந்திய குளங்கள் என்னும் நெருப்பில் காய்ச்சி (குளிர்ச்சி இங்கே சுடுகின்றது என்பது குறிப்பு) புதிதாகப் பூத்த பூக்களின் வாசனை என்னும் விஷத்தை அதில் பூசி (நறுமணம் சீதைக்கு இங்கே விஷமாகப்படுகின்றது) ஏற்கனவே சீதையின் உடம்பில் மன்மதன் தன் அம்புகளால் உண்டாக்கி வைத்திருக்கும் புண்களில் செலுத்தி அவள் உயிரை உண்ணுகின்றான்" என்று மாலைக்காலத்துச் சீதையின் நிலையைக் கம்பன் காட்டுகின்றான்; தென்றலைப் பற்றிப் பேசும் இந்தக் கவிதையைக் காண்போம்.

"கயங்கள் என்னும் கனல் தோய்ந்து கடிநாள் மலரின் விடம்பூசி
இயங்கு தென்றல் மன்மதவேள் எய்த புண்ணிடை நுழைய

உயங்கும் உணர்வும் நல்நலமும் உருகிச் சோர்வாள் உயிர் உண்ண
வயங்கு மாலை வான்நோக்கி இதுவோ கூற்றின் வடிவு என்றாள்"
(மிதிலைக் காட்சிப்படலம்-64)

இன்னொரு பாடலில் இருளாகிய கரிய நிறம், செவ்வானமாகிய சிவந்த மயிர், தென்றலாகிய வீசுகின்ற பாசக்கயிறு இவற்றைக் கொண்டு அந்தி மாலையாகிய யமன் சீதைக்கு முன் தோன்றினான் என்கின்றான். (மிதிலைக்காட்சிப் படலம் - 62) அடுத்து ஓர் இடத்தைக் காண்போம். திருமணத்திற்கு முன்பு சீதையின் நினைப்பையும் அவள் நிலையையும் சொல்லிவரும் கம்பன்

"மன்றல் குளிர்வாசம் வயங்கு அனல்வாய்
மின்தொத்து நிலாநகை வீழ்மலயக்
குன்றில் குலமா முழையில் குடிவாழ்
தென்றற் புலியே! இரை தேடுதியோ"

எனச் சீதைப்புலம்பலில் வைத்துத் தென்றல் காற்றைப் பேசுகின்றான். ஏற்கனவே தன் உயிரை எடுக்கவரும் மாலையாகிய யமனுக்குரிய வேலாகவும், பாசமாகவும் தென்றலைக் கண்ட சீதை, இங்கே தன் உயிரை இரையாகத் தேடித்திரியும் புலியாகக் காணுகின்றாள்.

இராமனை நினைந்து வருந்தும் சீதையை மட்டும் அல்லாமல் அவனை நினைந்து நிறையழியும் சூர்ப்பணகையையும் தென்றல் விட்டுவைக்கவில்லை. காகுத்தனைக் கண்ட கண்களால் வேறு ஒன்றையும் காணாதவளாகிய சூர்ப்பணகையின் காமத்தீ நாகப்பாம்பின் விஷம் வினாடிக்கு வினாடி ஏறுவதைப் போன்று அவள் உடலில் பரவுகின்றது. அப்போது மன்மதனும் தன் பங்காக அவள் உடலில் தன் அம்புகளைச் செலுத்தித் துன்புறுத்துகின்றான். முழுநிலவும் தன் பங்குக்கு அவள் உடல் மீது ஒளியைப் பாச்சித் துன்பம் செய்கின்றது. காமத் தீயால் கருகும் அவள் கோபமுற்று "பூர்ணச்சந்திரனைக் கறியாக்கிக் கொடிய அந்த மன்மதனைத் தின்னும் நினைப்பினளாக எழும்போது பொதிகைத் தென்றல் அவளுக்கு இறுதியைப் பயக்கும் வேலைப் போன்று அவள் மார்பிடைச் சென்று வீசச் செய்வதறியாது தளர்ந்து நின்று விடுகின்றாள்" என்று தென்றலால் அவள் படும் அவத்தையைக்

கம்பன் படம்பிடித்துக் காட்டுகின்றான். அந்த படக்கவிதையைப் பார்ப்போம்.

"கலைஉவா மதியே கறிஆகவன்
சிலையின் மாரனைத் தின்னும் நினைப்பினாள்
மலையமாருத மாநெடுங் காலவேல்
உலைய மார்பிடை ஊன்றிட ஓயுமால்"

(சூர்ப்பணகைப்படலம்-74)

மேலும் இந்தச் சூர்ப்பணகை "குளிர்ச்சி பொருந்திய நிலவும் பனி வாடையும் மன்மதனும் தன்னை வருந்தாதவாறு அச்சம் தரும் பற்களையுடைய கொடிய நாகப்பாம்புகள் வாழ்கின்ற ஒரு குகையைத் தேர்ந்தெடுத்து இதுவே தனக்குப் பாதுகாப்பானது எனச் சென்று சேர, அவ்விடத்திலும் தென்றல் சென்று அவளுடைய காமத்தீயை ஊதிவிட, முன்னைவிட அவள் மார்பு மூன்று மடங்கு காமத்தால் வேக, என்ன செய்வது என அறியாது பொன்னின் நிறம் போன்ற இளம் தளிர்களைப் பரப்பி அதில் புரண்டு உருளுகின்றாள்" என்று கூறும் கம்பன் கவிதையைக் காண்போமா!

"அன்னகாலை அழல்மிகு தென்றலும்
முன்னின் மும்மடியாய் முலை வெந்துக
இன்னவா செய்வது என்று அறியாது இளம்
பொன்னின் வார்தளிரில் புரண்டாள் அரோ"

(சூர்ப்பணகைப்படலம் -82)

இதுகாறும் தென்றலைக் காற்று என்ற அளவில் கையாண்ட கம்பனின் திறம் கண்டு வந்த நாம் இனி அவன் அக்காற்றைப் பாத்திரமாகப் படைத்துக் கையாளும் ஆற்றலைக் காண்போம். இலங்கை வேந்தன் அரண்மனையிலும் பிற இடங்களிலும் தேவர்கள் பணியாளர்களாக பணிபுரிகின்றனர் என்பதை "அர மடந்தையர் சிலதியர் அரக்கியர்க்கு - அமரர் மடங்கி வந்து உழையராய் உழல்குவர்" என்பது கொண்டும் "தேவர் என்பவர் யாரும் இத்திருநகர்க்கு இறைவற்கு ஏவல் செய்பவர்" என்பது கொண்டும் அறியலாம்.

(தொடரும்)

# "திருமாளிகைத் தேவர் திருவுள்ளம்"

(நா. குருசாமி தேசிகர், மதுரை)

"வடமொழியாளர்க்குத் தொழில் தங்கள் மொழியை ஓதுவதல்லது வேறு கிடையாது. அவ்வடமொழியாளர் அவ்வப்பகுதியில் நிலவிய உயரிய நூல்களைத் தங்கள் மொழியில் தங்கள் மொழிநடைக்கேற்பப் பெயர்த்தெழுதித் தம் மொழியைப் பொன்போலப் போற்றிவந்தனர். நந்தமிழ்ப் பெருமக்கள் தங்கள் மொழியைக் கைவிடுவதில் முன்னணியில் நின்று உயரிய நூல்கள் பலவற்றைத் தீயிலிட்டுப் பொசுக்கியும், ஆற்றிலிட்டு நீராடியும் இன்புற்றனர். பெற்றோர் தேடித்தந்த பெருஞ்செல்வத்தைப் பேணாது ஒழிந்த பேதைபோல் இன்று தமிழர் ஏமாந்து நிற்கின்றனர். வடமொழியில் உள்ள காமிகம், காரணம் முதலிய சிவாகமங்களைப் பார்த்தால், தமிழிலிருந்து கருத்துக்கள் பல எடுத்து வடமொழியாக்கும் திறம் இனிது புலப்படும்"

(பதினெண்கீழ்கணக்குச் சொற்பொழிவுகள்-பக்.18)

* இவ்வாறு, சித்தாந்த கலாநிதி ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை வடமொழி ஏற்றம் பெற்ற வரலாற்றைக் காட்டுவார்கள். இதே கருத்தைப் பரிதிமாற்கலைஞர் தமிழ்வரலாற்று நூலில், தமிழில் இருந்து வடமொழி ஏற்றம் பெற்றதை ஆராய்ந்து விளக்குவார்.

## ஆரியப்படை

தமிழ்நாட்டுக்குத் தெற்கிலிருந்த நிலப்பகுதியைக் கடல்கொண்டமையால், தமிழர், தம் நாட்டுப்பரப்பை வடக்கில் விரிவாக்கிக்கொண்டிருந்தனர். அப்பொழுது ஆரியரும் தெற்கில் தம் நாட்டை விரிவாக்கிக் கொண்டிருந்தனர். இந்தப் போட்டியில் நிகழ்ந்த போர்களில் நெடுஞ்செழியன் ஆரியப்படைகளை வென்றிருக்கலாம். ஆகையால், இவனுக்கு ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்னும் பெயர் வழங்கியிருத்தல் வேண்டும். இங்குச் சுட்டப்படும் "ஆரியர்" தொடக்ககாலப் பல்லவராக இருத்தல் கூடும் என்று மயிலை வேங்கடசாமியார் கருதுவர். (தமிழ்நாட்டு வரலாறு - சங்ககாலம் பக்.201)

## களப்பிரர்

சங்ககாலத் தமிழ்வேந்தரை அடுத்து வந்த காலத்தில் களப்பிரர் என்ற நாடோடிகள் வடமொழிக்கு முதன்மை தந்தனர். மூவேந்தர்களும் முடங்கிக்கிடந்த காலம். கி.பி. 340 முதல் 640 வரை தமிழரை -

தமிழ்க்கலைகளை ஏழவொட்டாமல் வடமொழி கோலோச்சியது. தமிழர் ஆகமவழி நின்றவர். வடமொழிக்கலப்பால் வைதிக சைவம் எனவாயிற்று. சமணம் பௌத்தம் வீழ்ச்சியுற்றது. அவ்வீழ்ச்சிக்குரிய காரணத்தை ஆராய்ந்த சமணச் சான்றோர் தாம் மேற்கொண்டுள்ள வடமொழிக்கும் தமிழ்மக்களது, தமிழ்மொழிக்கும் தொடர்பில்லை என்று கண்டனர். தமிழ்மொழி வாயிலாக சமணரின் தொண்டு நிகழ்ந்தது. எனினும் தமிழ்மொழி வாயிலாக அயல்மரபு திணிக்கப்படுவதை பக்தி இயக்கம் தடுத்து நிறுத்தியது. மூர்த்திநாயனார் போன்ற வணிகர்களும் நாடாளும் வாய்ப்பு நாட்டில் நிகழ்ந்தது. கோட்புலிநாயனார், மூர்த்தி நாயனார் போன்ற வணிகர்களும் நாடாளும் வாய்ப்பு நாட்டில் நிகழ்ந்தது. கோட்புலி நாயனார், கூற்றுவ நாயனார், சிறுத்தொண்ட நாயனார், நீடூர்முனையடுவார் நாயனார் போன்றவர்கள் முடிமன்னர்கட்கு உதவிய உபகாரிகள். அந்நாயனார்களால் தமிழ்மரபு பேணிக்காக்கப்பட்டது.

## தமிழர் நிலை

அயல்நாட்டிற்புகுந்த ஆரியச் சிறுபான்மையர், தங்களுக்குள் மிகுந்த ஒற்றுமையும், ஊக்கமும் உடையராய், முன்னேறினர். தமிழர் பெரும்பான்மையோர், சோம்பர், மடிமை, புறக்கணிப்பு, ஒற்றுமையின்மை உடையவராய்ப் பின்னடைந்தனர். எனினும் சமயகுரவர் நால்வரும், சந்தானகுரவரும் தமிழர் பின்னடையாமல் நிற்க, கலப்பிலே மயங்காமல் காத்தனர்.

## ஆரியவேதம்

இந்திய நாட்டில் சமணம், புத்தம், தாந்திரிகமதங்கள், வேத காலத்திற்கால் கொண்டன. பைரவம், காபாலிகம், மாவிரதம், பாசுபதம் முதலியனவும் முகிழ்த்தன. வைதிகர்கள் இவைகளை அவைதிகம் என்றனர். ஆரியவேதத்தால் - தமிழர் ஆரியர் கூடிய வாழ்வு - கலப்பு காரணமாக "வேதநெறி தழைத்தோங்க - மிகுசைவத்துறைவிளங்க" என்ற கோட்பாடு எழுந்தது. வேதத்தையும், அதன்வழிப்பட்ட ஒழுக்கத்தையும் உடன்பட்டு ஒழுகியபோதிலும், தமிழ்மக்களில் அறிஞரானவர்கள் நிறைவின்றியிருந்தனர். அந்நிலையில் வேதத்தையே பெரிதுபடுத்தி, அதன் கரும காண்டத்தையே வற்புறுத்தி ஜைமினி முனிவர் "பூர்வமீமாம்சை" கண்டார். சமண பௌத்த மதங்கள் வேத ஒழுக்கத்தை வன்மையாக மறுத்தன. அதனால் ஜைமினி முனிவர், ஞானங்கூட வேண்டுவதில்லை, வைதிக கருமமே போதும்; "பயன் கிட்டும்" என்றார். சாங்கியம், தருக்கம், உத்தரமீமாசை, யோகநூல், முதலியன அதுபோல் தனித்தனி வழிகாட்டுவனவாயின. இதற்கு மூலம் ஆரிய வேதம் ஆகும். இவை "தரிசனங்கள்" என்பர்.

தரிசனநூல்களில் பக்திநெறிக்கு வழியே இல்லாமல் இருந்தது. பண்டைத் தமிழ் மக்கள் கொண்டொழுகிய அன்பு வழிபாட்டிற்கு, இடைக்காலத்தில் தோன்றிய சமண பௌத்த சமயங்கள் - மாயாவாதம் உட்பட எதிரிடையாக விளங்கின. "அறிவு ஜீவிகள்" என்று அடையாளங்காட்டி விடலாம். இவ்வுலகு முழுதும் பரவிய சமய தத்துவங்களில் "கடவுளை முன்னிறுத்திய சமயமே" சான்றான்மைமிக்கது என்பர். அதனை நன்றாக அறிவுறுத்தியவர் அப்பரடிகள். அவர் அருளிய திருக்குறுந்தொகைப் பாடல் இது.

*"அண்டமார் இருள்ஊடு கடந்தும்பர்*
*உண்டுபோலும் ஓர் ஒண்சுடர் : அச்சுடர்*
*கண்டிங்கு ஆரறிவார்? அறிவார் எல்லாம்*
*வெண்திங்கள் கண்ணிவேதியன் என்பரே"* - என்ற பாடல்

சிவத்தை முன்மொழிந்து, அச்சிவத்தை அடைய உறவுகோல் நட்டு, உணர்வு கயிற்றினால் முறுக, வாங்கிக் கடைந்தால் நம்மிடம், சிவம் பிரகாசிக்கும் என்று மொழிந்தார். இவ்வுண்மையைச் சுந்தரர் "பத்திமை", "அடிமை" - என்ற இருபெரும் பண்புக் கோட்பாட்டால் மனித குலம் தழைக்கும் என்று வழிமொழிந்து "பத்திமையையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன்" என மொழிந்து மெய்ப்பொருள் சுட்டினார்.

## திருமாளிகைத் தேவர்

பதிகப் பெருவழியில் பயணித்த 27 திருமுறையாசிரியர்களில் திருமாளிகைத்தேவர் அருளிய திருவிசைப்பாப் பாடல் ஒன்று பத்திமை அடிமையற்ற வாழ்வு மேற்கொண்ட சான்றோரைக் காணவும் கூடாது - பேசவுங்கூடாது என்று மொழிந்து இருசார்பும் நீத்த அச்சான்றோரைப் "பேய்" எனவும் கூறி விழிப்படையச் செய்கிறார். அப்படி விழிப்படையச் செய்யும் திருமாளிகைத் தேவரின் திருவுள்ளம் யாதோ? அத்திருவுள்ளம் அமைந்த பாடல் பண்பாட்டு வரலாற்றுச் சிறப்புடையது.

*"திசைக்குமிக்குலவு சீர்த்தித்*
*தில்லைக் கூத்துகந்து, தீய*
*நசிக்க வெண்ணீறதாடு நமர்களை*
*நணுகா: நாய்கள்!*

*அசிக்க, ஆரியங்கள் ஓதும் ஆதரைப்*
*பேதவாதப்*
*பிசுக்கரைக் காணாவாய்*
*பேசாதப் பேய்களோடே"*

இப்பாடல் ஆரியங்கள் ஓதும் ஆதரை - (அறிவற்றவரை)க் காண்டலும் அவர்களோடு பேசுதலும் கூடா என்று நேடியாகச் சாடுகின்றார்.

## ஆகமங்கள்

அண்மையில் நிகழ்ந்த சட்டமன்றத்தொடரில் கலைஞர் அரசு ஆகமங்களைத் தமிழில் கொண்டுவருவதற்கு ஏற்பாடு செய்துள்ளதை அறநிலைய அமைச்சர் தெரிவித்திருப்பது வரவேற்கத்தக்கது. வேதங்கள் ஆரியர்களுடையன என்பதில் கருத்துவேறுபாடில்லை. ஆகவே ஆகமங்களின் கொள்கை வேதங்களின் கொள்கையினின்று வேறுபடுமாயின் அஃது யாருடையது? தமிழருடையதாகத்தான் இருக்க முடியும் என்பர் அருணையார். (திருமுறைத் திருநெறி பக்.11) அவ்வாகம முறைகளைப் பௌத்த சமண மதங்களும் கொண்டிருந்தன. அதனைத் திருஞானசம்பந்தர் "ஆகமத்தொடு மந்திரங்கள் அமைந்தசங்கதம்" என்றும், சமணர்கள் "மந்திகள் போல் உலவி ஆரியத்தொடு செந்தமிழ்பயன் அறிகிலார்" - என்றும் அறிவுறுத்துகிறார்.

## நிறைவுரை

ஆதலின் திருமாளிகைத்தேவர் முதலிய திருமுறையாசிரியர்கள் திருஞானசம்பந்தரை வழிமொழிந்து சமணர்களும், சமஸ்கிருத முதன்மை கொள்ளும் வேதியரும் பேதவாதம் பேசும் "பேய்" என்றும், அவர்களைக் காணவும் கூடா என்று அறம் வலியுறுத்தினார். "தமிழைப் பழித்தவனைத் தாய் தடுத்தாலும் விடாதே" என்பார் பாவேந்தர். அதனையும் தாண்டித் தமிழ் ஞானசம்பந்தர், தமிழ்ப் புலவனைப் பழிப்பவரைக் குருடர் என்றும், அவ்வாறு கூறுபவர் சமணரானாலும், அவர்களுக்கு நாம் எளியவரல்லர் என்ற கருத்தை,

*"பொங்குநூல் வழியே யன்றிப்*
*புலவோர்களைப் பழிக்கும் பொல்லா*
*அங்கதர்க்கு எளியேனலேன் திரு*
*ஆலவாயன் நிற்கவே"*

என்று ஆரிய அறிவு ஜீவிகளின் ஆர்ப்பரிப்பு, அருந்தமிழ்நெறியின் முன்பு சிறுத்தையின் முன்பு நரியின் கூக்குரல்போல் ஒடுங்கும் என்பதை உணரலாம். இதுவே திருமாளிகைத் தேவர் திருவுள்ளம்.

---

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "அடிகள் முன்னர் யான் அடி வீழ்ந்தேன்" - II

(மு. பழனிஇராகுலதாசன்)

"அரசு நடத்தும் கூட்டுறவு விழா - காரைக்குடி SMS பள்ளியில் நடைபெறுகிறது. மாவட்ட நிர்வாகம் நடத்துகிறது. அடிகள் தலைமையில் கருத்தரங்கம் - நீங்கள் இருவரும் பேசுகிறீர்கள்" - என்று கவிஞர் பரமகுரு எழுதி அழைத்தார்கள். இசைவு தெரிவித்து எழுதிவிட்டு, விழா நாளன்று கல்லூரியின் பொருளியல் பேராசிரியர் அ.வேங்கடாசலமும் நானும் புறப்பட்டோம். அரசு விழா என்பதாலும், மாவட்ட ஆட்சியரின் நேரடிப் பார்வையில் நிகழ்கிறது என்பதாலும் அந்தத் "தோரணைகள்" அதிகம் தென்பட்டன. கருத்தரங்கிற்குத் தவத்திரு குருமகாசந்நிதானம் தலைமை ஏற்றிருந்தார்கள். "நமது நாட்டின் கூட்டுறவு அமைப்பு மக்களை எட்டியிருக்கிறது" என்று பேராசிரியர் வேங்கடாசலம் பேசவேண்டும்; இன்னும் எட்டவில்லை என்று நான் பேசவேண்டும். தவத்திரு அடிகள் தலைமை என்பதாலும், அவர்களே எங்கள் பெயர்களைப் பரிந்துரைத்து நிகழ்ச்சியை அமைத்துக் கொடுத்திருந்ததாலும் வேங்கடாசலமும் நானும் ஓரளவுக்கு நிறைவாக தயார் செய்திருந்தோம். ஒருமுறை வீட்டில் பேசிப்பார்த்துக் கொண்டோம். வேங்கடாசலம் அவர்கள் இயல்பாகவே பொருளியல் பேராசிரியர் என்பதால் ஏராளமான குறிப்புக்களோடு வந்திருந்தார். சென்று மக்களிடம் சேர்ந்திருக்கிறது என்று கூட்டுறவு இயக்கத்துக்கு மேலும் வலுசேர்க்கும் வகையில்தான் தவத்திரு அடிகள் தீர்ப்பும் முடிவுரையும் வழங்குவார்கள் என்று நாங்கள் அனுமானித்ததால் வேங்கடாசலம் மிகவும் முயன்று அரிய வரலாற்றுக் குறிப்புக்களையெல்லாம் தயார்ாக வைத்திருந்தார்.

குறிப்பிட்ட நேரத்தில் அடிகள் வந்துவிட்டார்கள். நிகழ்ச்சி தொடங்கிவிட்டது. அடிகளுக்கு வலமும் இடமுமாக நாங்கள் அமர்ந்திருந்தோம். வேங்கடாசலம் பக்கம் திரும்பிய அடிகள் "மதுரையில் ஒரு நிகழ்ச்சி இருக்கிறது. நமது நிகழ்ச்சி முடிந்தவுடன் புறப்படுகிறேன். நீங்கள் இருந்து விழா முடிந்தபிறகு புறப்படுங்கள். அரசு

விழா. அதுவும் கூட்டுறவு விழா. இருந்து புறப்படுங்கள். உங்களுக்கு உரிய வழிச்செலவுத் தொகைதருவார்கள். பெற்றுக்கொள்ளுங்கள்" என்று சொன்னார்கள். வழக்கம்போல அடிகள் கூட்டுறவு இயக்கத்தின் வரலாறு, அதன்மீது பண்டித சவகர்லால் நேருவுக்கு இருந்த பிடிப்பு, நம்பிக்கை ஆகிய செய்திகளைச் சொன்னார்கள். எங்கள் பணியை நாங்களும் செய்தோம். அடிகள் முன்னுரையில் சிறிது விளக்கமாகக் கூறியபடியாலும், உடன் புறப்படவேண்டியிருந்ததாலும் பின்னுரையைச் சுருக்கமாக, ஆனாலும் செறிவாக வைத்துக்கொண்டார்கள். "சோஷலிசத்தை நோக்கி நமது நாடு மேற்கொண்டிருக்கும் ஒரு நெடிய பயணத்தில் கூட்டுறவு இயக்கமானது ஒரு குறிப்பிட்ட எல்லைக்கல்; நீண்ட நெடிய அடிமைத்தளைக்குப் பிறகு நாம் நமது குறிக்கோளை நோக்கி ஒரே பாய்ச்சலில் பாய்ந்துவிட முடியாது. நாம் மெதுவாகத்தான் நகர்கிறோம்; ஆனாலும் நமது சீரிய தலைமையின்கீழ் நேர்கோட்டில் பயணப்படுகிறோம்" - என்று உரைத்துவிட்டுப் புறப்பட்டுவிட்டார்கள். மேடையில் வேறுபிற நிகழ்ச்சிகளுக்கு இடம்விட்டு நாங்கள் கீழே வந்து அமர்ந்தோம். நிகழ்ச்சிகள் நடந்து முடிய நண்பகல் ஆகிவிட்டது. மாவட்ட ஆட்சியர், தாசில்தார், கோட்டவளர்ச்சி அதிகாரி, இன்னும் வேறுசில அதிகாரிகள் அனைவரும் ஒவ்வொருவராகக் கிளம்பிவிட்டனர். ஒலிபெருக்கி ஏற்பாட்டாளர் மட்டும் கருவிகளை ஒழுங்குசெய்து அவரும் புறப்படலானார். கூத்தாட்டு அவை கலைந்து சென்றதுபோல அனைவரும் சென்றுவிட்டனர்.

நானும் பேராசிரியர் வேங்கடாசலமும் மட்டும் நின்றுகொண்டிருந்தோம். அடிகள் சொன்னார்களே, வழிச் செலவுக்குத் தருவார்கள் பெற்றுக்கொள்ளுங்கள் என்று நாங்கள் பத்துத் திசைகளிலும் பார்வையைச் செலுத்தி நின்றோம், ஏன், என்ன என்று கேட்க யாரும் இல்லை. மெதுவாக வெளியே நடந்தோம். நல்ல பசிநேரம். உடனடியாக மதிய உணவு சாப்பிடவேண்டும் என்ற வேட்கை. எதிர்பாராதவிதமாக எங்கள் இருவரிடமும் தேவகோட்டை வந்து சேர்வதற்குரிய பஸ் கட்டணம் அளவுக்குத்தான் காசு இருந்தது. எங்கள் நிலையை எண்ணி ஒருபக்கம் சிரிப்பு; ஒருபக்கம் வேதனை. இப்படிச் சிக்கல் ஆகிவிட்டதே, என்ன செய்யலாம் என்று தயங்கித் தயங்கி நடந்தோம். பள்ளியின் வாசலில் பாவலர்மணி ஆ.பழநி அவர்கள் நின்றுகொண்டு நண்பர்களிடம் உரையாடிக்கொண்டிருந்தார்கள். எங்களைக் கண்டதும், எங்கள் இருவரின் உரையைப் பாராட்டிவிட்டு, "மதியம் நீண்டநேரம் ஆகிவிட்டதே, தேவகோட்டைபோக நேரம் ஆகுமே, சாப்பிட்டுவிட்டுப் போகலாமே, வாங்க" என்று அழைத்தார்கள்.

வயிற்றில் பால் வார்த்தது என்பார்களே அப்படி இருந்தது கவிஞரின் அன்பழைப்பு! உள்ளதைத் தெரிவிப்பது தவிர வேறு வழியில்லை எங்களுக்கு! "ஒரு சிக்கலான விஷயம் சொல்வா" - என்று ஆரம்பித்த வேங்கடாசலம் எங்கள் நிலையை விவரித்து "கையிலே இருக்கும் காசு டிக்கட்டுக்குத்தான் சரியாக இருக்கிறது; சாப்பிடும் அளவுக்கு இல்லை. அரசு அதிகாரிகள் ஆலாய்ப் பறந்து போய்விட்டார்கள். நாங்களும் எதிர்பாராதவிதமாக வந்துவிட்டோம்" என்றார்.

அன்றைய சாப்பாடு கவிஞர் போட்ட சாப்பாடு. நன்றி தெரிவித்துவிட்டு ஊர்போய்ச் சேர்ந்தோம். இந்த அனுபவத்தை எப்படியாவது ஒரு சந்தர்ப்பத்தில் தவத்திரு அடிகளிடம் சுவையான அனுபவம் என்ற அளவில் தெரிவிக்க விரும்பினோம். அப்படி ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது. சுருக்கமாகவும் நிரல்படவும் பேராசிரியர் வேங்கடாசலம் நடந்தவற்றைத் தெரிவித்தார்கள்.

முதலில் வேறு ஏதோ செய்தி என்று கேட்டுக்கொண்டே வந்த அடிகளுக்குச் செய்தியைக் கேட்கக் கேட்க முகமலர் சிறிது வாட்டமுற்றது. சொல்லப்பட்ட செய்தி பிரமாதமான, மிகவும் பாதிப்பை ஏற்படுத்திய, வெகுமுரணான செய்தி இல்லைதான். எனினும் அடிகளின் திருமுகவிலாசத்தில் சிறிது கவலை தோன்றியது; தோன்றிய வேகத்திலேயே மறையவும் செய்தது. ஆனாலும் சிந்தித்திருக்கக்கூடும். மிகவும் மௌனமாகச் செய்திகளை உள்வாங்கிக்கொண்டு என்னையும், பேராசிரியர் வேங்கடாசலத்தையும் அடிகள் சிறிது நேரம் உற்றுக் கவனித்தார்கள். "குணநலனே சான்றோர் நலன்" என்றபடி அடிகள் சூழ்நிலையை வென்றுநின்றார்கள். இறுக்கமாக நிலவிய அந்த நேரத்தைச் சிறிது மாற்றநினைத்தது போல எங்களை நோக்கி முறுவலித்தார்கள். எங்கள் முகங்களை மாறி மாறி அடிகள் பார்க்கப் பார்க்க, இந்த அற்பமான, சாதாரண விஷயத்தை ஏன் இவ்வளவு பெரிதுபடுத்தி அடிகளிடம் தெரிவித்தோம் என்ற மனக்குறுகுறுப்பு எங்களிடம் தோன்றியது.

"நல்லவேளை, பட்டினியாய்ப் போகவில்லை, புலவர் பழநி சாப்பாடு போட்டிருக்கிறார்!" என்று மௌன இறுக்கத்தைப் பேச்சுக் கொடுத்துக் கலைத்தார்கள். அடிகள் பேச்சுக்கொடுத்தபிறகுதான்

எங்களுக்கு மூச்சே வந்தது போலிருந்தது. எனினும் ஏன்தான் இதை அடிகளிடம் தெரிவித்தோம் என்ற மனநிலையே எங்களுக்கு நீடித்தது. எங்களது மெய்ப்பாடுகள் மூலம் அதனையும் அடிகள் புரிந்து கொண்டிருக்கவேண்டும்.

பிரச்னை எதுவானாலும் அதைக் குறுக்கிக் குறுக்கிப் பேசிக் கொண்டே போனால் தீர்வு எதுவும் கிடைக்காது; மேலும் மேலும் இறுக்கமும் மனப்புழுக்கமுமே மிஞ்சும். பிரச்னையை ஒரு விரிந்த தளத்துக்கு எடுத்துப்போய், சற்று உயரத்தில் அல்லது சற்று தொலைவில் வைத்துவிட்டால் மனம் இறுக்கம் குறைந்து இலேசுப்படும். இந்த உளவியல் பாங்கு, அணுகுமுறையை தவத்திரு அடிகளிடம் பல சந்தர்ப்பங்களில் தரிசிக்கமுடியும்.

எங்களைச் சற்று உற்றுநோக்கிய அடிகள் சற்று பெரிதாகச் சிரித்தபடியே, "ஆமாம் வெங்கடாசலம், நம்முடைய பியூராக்கிரசி அப்படித்தானே இருக்கும்!"

இந்தச் சிறிய உரையாடல் மொழி, மாவட்ட ஆட்சியர், அவருடைய பரிவாரங்கள் மற்றும் உள்ளூர் அதிகாரிகள் என்று மட்டுமே சிறிய வட்டத்துக்குள் சிக்கிக்கிடந்த எங்கள் மனங்களை பெரிய வட்டத்துக்கு, கொண்டுபோய் இந்திய அளவில் நிலவிய ஒரு பொதுப் பிரச்னையில் கொண்டுபோய் நிறுத்திவிட்டது.

நாங்களும் சிந்தித்தோம்! "ஆமாம், நமது இந்திய 'பியூராக்கிரசி' - ஆளும் வர்க்கம் - இப்படித்தானே இருக்கும்"

அதற்காக அடிகள் அத்தோடு நிறுத்திக்கொள்ளவில்லை. நாங்கள் புறப்படும்போது "அதுபற்றி விசாரிக்கிறேன்" என்று கூறியபடி வழியனுப்பினார்கள்.

சந்திப்புகள், விசயங்கள் சிறியவையே ஆனாலும், ஒரு விரிந்த விசாலப்பார்வையில் சிந்திக்கத் தூண்டும் தவத்திரு அடிகளின் ஆளுமைத்திறம் பற்றி நினைத்து நினைத்துப் பார்க்கிறது மனம்! அப்போதெல்லாம் "அடிகாள்" என்று மெய்சிலிர்க்க வணங்குகிறேன்!

# சைவசமயக் கலைக்களஞ்சியம் – வெளியீடு

நாடறிந்த சமய இலக்கியச் சொற்பொழிவாளர் பேராசிரியர். முனைவர்.இரா. செல்வக்கணபதி அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு சைவசமயக் கலைக்களஞ்சியம் உருவாக்கும் பெரும்பணி தொடங்கப்பட்டுள்ளது. இந்தக் கலைக்களஞ்சியம் சைவசமயம் சார்ந்த எல்லாத் தரவுகளையும் திரட்டி அடியிற்காணும் தலைப்புகளில் ஒன்பது தொகுதிகளாக வெளியிடப்பெறும்.

| | | |
|---|---|---|
| 1. சைவசமயம் | - | தமிழகம் |
| 2. சைவசமயம் | - | உலகம் (தமிழகம் நீங்கலாக) |
| 3. சைவத் திருமுறைகள் | - | |
| 4. திருமுறைத் தலங்கள் | - | பன்னிரு திருமுறைகளில் இடம் பெற்றவை |
| 5. பிற்காலத் தலங்கள் | - | (திருமுறைத் தலங்கள் நீங்கலாக) |
| 6. சைவசமய அருளாளர்கள் | - | (அறுபத்துமூவர் மற்றும் திருவருட் செல்வர்கள் |
| 7. சைவ - சமய நூல்கள் | - | (திருமுறைகள் அல்லாத பிற அருள் நூல்கள் அனைத்தும்) |
| 8. சைவசித்தாந்தம் | - | |
| 9. சைவ - அமைப்புகள் | - | திருமடங்கள், சைவமன்றங்கள், சைவத் தொண்டர்கள் |

முதலில் தமிழிலும் தொடர்ந்து ஆங்கிலத்திலும் 10½ X 8½ அளவில் வண்ணப்படங்கள் நிறைந்ததாக உயர்ந்த தாளில் அச்சிடப்படும். காலத்தின் தேவை கருதி E Book வடிவிலும் கொண்டுவரப்படும்.

சைவசமயத் துறைவல்ல அறிஞர்கள் சான்றோர்கள் சைவ சமய அமைப்புப் பொறுப்பாளர்கள் தங்களின் சுருக்கமான வாழ்க்கைக் குறிப்பையும் சைவ சமய வளர்ச்சியில் ஆற்றியுள்ள பன்முகப்பணிகள் குறித்த தரவுகளையும், தங்கள் வண்ணப் புகைப்படம் ஒன்றுடன் இணைத்து அடியிற்காணும் முகவரிக்கு அனுப்பிவைக்க வேண்டப்படுகின்றனர்.

டாக்டர். இரா செல்வக்கணபதி
பதிப்பாசிரியர்
சைவசமயக் கலைக்களஞ்சியம்
தெய்வச் சேக்கிழார் மனிதவள மேம்பாட்டு அறக்கட்டளை
H-15/2 கரிகாலன் தெரு
கலாசேத்திரா குடியிருப்பு, பெசன்ட் நகர்
சென்னை - 600 090

# குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனக் குருபூசை விழா

நமது ஆதீனக் குருபூசைவிழா 8.9.2006-இல் திருவண்ணாமலையில் ஆதீனக் குருமுதல்வர் திருக்கோயிலிலும் 9.9.2006-இல் குன்றக்குடியில் ஆதீனத் திருமடத்திலும் சிறப்பாக நடந்தது.

8.9.2006 வெள்ளிக்கிழமை ஆதீனக் குருமுதல்வர் திருவருள்திரு தெய்வசிகாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகளின் மகா குருபூசை நாளாகிய ஆவணி பூரட்டாதியன்று திருவண்ணாமலையில் குருமுதல்வர் சீவசமாதி கொண்டுள்ள குருமூர்த்தக் கோயிலில் காலை 10 மணியளவில் சிறப்பு வழிபாடு நிகழ்ந்தது. 46வது குருமகாசந்நிதானம் அவர்களும் அன்பர்கள் நூற்றுக்கணக்கானோரும் உடன்வர இந்த வழிபாட்டு நிகழ்ச்சிக்கு முன் காலை 7 மணியளவில் திருவண்ணாமலை பெரிய கோபுர முகப்பிலிருந்து குருமுதல்வர் திருவுருவத் திருவீதி உலா நிகழ்ந்தது.

நமது ஆதீனத்தின் திருவண்ணாமலைக் கிளைச் சிறப்பு முகவர் திரு. ஏடி.எம். பன்னீர்செல்வம் சிறப்பாக நிகழ்ச்சி ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

9.9.2006 காலை 7.00 மணியளவில் குன்றக்குடியில் உள்ள குருமூர்த்தங்களில் வழிபாடும் அருள்தரு காளத்திநாதருக்கு சிறப்பு வழிபாடும் அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்கு வழிபாடும் நிகழ்ந்தன.

காலை 8.30 மணியளவில் குருமுதல்வரின் திருவுருவப் படம் திருவீதி உலா கொட்டு முழக்குடன் நூற்றுக்கணக்கான அன்பர்கள் சூழ மிகச் சிறப்பாக நடந்தது.

காலை 10.30 மணி அளவில் ஆதீனக் கொலுமண்டபத்தில் அமைக்கப்பெற்றிருந்த எழில்மிகு மேடையில் சமய இலக்கிய விழா நிகழ்ந்தது. முதலில் நூல் வெளியீட்டு விழா - கருத்தரங்கம் தொடங்கியது. திரு. ஏ.எம். சம்பந்தமூர்த்தி இறைவணக்கம் பாடினார். திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் தலைமை வகித்து, அருள்நெறித் தந்தையவர்களின் சொற்பொழிவு நூலாகிய "அருள்நெறி முழக்கம்" என்ற நூலையும் மரு. பரமகுரு இயற்றிய "மனச்சுவடுகள்" என்ற கவிதை நூலையும் வெளியிட்டருளினார்கள். திருச்சிராப்பள்ளித் தொழிலதிபர் "தமிழவேள்" திரு. வீ.கே.என். கண்ணப்பன் அவர்கள் நூல்களின் முதற்படிகளையும் அறநெறியண்ணல் சிவத்திரு ப. மூக்கப்பிள்ளையவர்கள்

இரண்டாம் படிகளையும் பெற்றுக் கொண்டனர். அடுத்துக் கருத்தரங்கம் தொடங்கியது. "தமிழாகரர்" திரு. தெ. முருகசாமி அவர்கள் "திருமூலர் திருநெறி" என்ற பொருள்பற்றியும் சொல்வேந்தர் திரு. சுகி சிவம் அவர்கள் "அம்மையாரின் அற்புதத் திருவந்தாதி" என்ற பொருள் பற்றியும் உரை நிகழ்த்தினர்.

பிற்பகல் 2.30 மணி முதல் 4.00 மணி வரை பழனி அருள்தரு. தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் தேவாரமணி திரு. க. வேங்கடேச ஓதுவார் குழுவினரின் திருமுறை இசையரங்கு நடைபெற்றது. மாலை 4.00 மணியளவில் பாராட்டு விழா. திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் திரு. சுகி. சிவம் அவர்களுக்கு "நற்றமிழ் நாவலர்" என்னும் பட்டம் வழங்கி, பொற்பதக்கம், பட்டயம் தந்து பொன்னாடை போர்த்து வாழ்த்துரை நல்கினார்கள்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. முனைவர். பி. மருதமுத்து அவர்களும், தமிழ்நாடு அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு கே.ஆர். பெரியகருப்பன் அவர்களும் சுகி. சிவம் அவர்களைப் பாராட்டிப் பேசினர். மரு. பரமகுரு நன்றிகூற மங்கல வாழ்த்துடன் விழா இனிதே நிறைவெய்தியது. பேராசிரியர் கிருங்கை சேதுபதி நிகழ்ச்சி இணைப்புரை வழங்கினார்.

இரவு 7.30 மணியளவில் திருவருள்திரு குருமகாசந்நிதானம் கொலுவீற்றிருந்து அன்பர்களுக்கு அருளாசி வழங்க மகாகுருபூசை வெகு சிறப்பாக நிறைவுற்றது.



## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

**– ஆசிரியர்**

# அருளாலய சூழ்நிலை

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி -9)

ஆங்காங்கே கலவ ரங்கள்!
அடுத்தடுத்து, அத்து மீறல்!
ஆங்காங்கே உயிர்ச்சே தங்கள்!
அதற்கடுத்த குண்டு வீச்சு!
ஆங்காங்கே நெருப்பு வைத்தல்!
அதற்கும்மேல் மோதல் சாதல்!
ஆங்காங்கே கடைய டைப்பு!
அவற்றோடே வல்வ ழக்கு!

என்றுலகில் அன்றாடம் காணும் போது
எதற்குத்தான் வாழ்கின்றோம் என்ற எண்ணம்
நன்றாக எனக்குள்ளே வந்த போது
நலமாக நல்லவழி காணும் நோக்கில்
குன்றக்குடி அடிகளெனும் குருவைத் தேடி
குறைகூறி அதைதீர்த்துக் கொள்ள வேண்டி
அன்றொருநாள் என்மனந்தான் விழைந்த போது,
அருட்டந்தை இருப்பிடத்தை நாடி னேனே!

அப்பரின் தோற்றம் போல
அடிகளைக் கண்ட தும்மே
ஒப்புயர் வற்ற அன்னார்
உயர்திரு வடியில் வீழ்ந்து
செப்பினேன் மேலே சொன்ன
செகத்துறும் சிறுமை யெல்லாம்!
அப்படிக் கேட்டுச் சொன்னார்
அழகான பதிலெ னக்கே!

நம்நாட்டுப் பழமொழிகள் பலவற் றுள்ளும்
நம்றொன்றன் பொருளைத்தான் நினைவு கூர்ந்தார்
பம்பரமாய்ப் பத்தியுடன் நாளும் நாளும்
பரபரப்பாய் படிப்பார்கள் இராமா யணத்தை!
நம்புகின்ற அக்கதையின் சாரந் தன்னில்
நசையின்றிப் பெருமாளின் கோயில் தன்னைத்
தெம்புள்ள வரையிடித்துத் தகர்த்து விட்டுத்
தெரியாத படியாகத் திரிவா ரந்தோ!

கற்றபடி நிற்க என்ற
கன்னித்தமிழ் வள்ளு வத்தை
உற்றபடி எண்ணா நிலையே
உரைத்திட்ட பழமொழிக்கு
முற்றமுழுச் சான்றாம்! அந்த
முழுமைக்கே அடிப்படை யாக
மற்றபடி உண்டோ? என்றார்!
மயங்கினேன்! அடுத்தும் சொன்னார்!

கலவரத்தால் கைகலப்பு, மேலும் அற்பக்
கயவர்கள் கல்லெடுத்து, அடிப்ப தாலே
பலவகையாய் எல்லோரும் சிதறி யோடப்
பதறாமல் பார்த்தேதான் மகிழ்ந்து, தீமை
பலப்பலவாய்த் தொடர்ந்தேதான் செய்ய, அவரோ
பைந்தமிழின் பாரதியார் சொன்ன தைப்போல்
பலர்வாடத் துன்பங்கள் செய்யும் பாவி
பட்டமுடன் எமனுக்கே இரையா வாரே!

என்றதன்பின் அத்து மீறல்,
என்பதுடன் குண்டு வீச்சு
என்பதற்கும் பதிலைச் சொன்னார்!
எமக்குத்தான் எல்லாம் இந்த
மன்பதையில் என்று கூறும்
மமதையெனும் பேரா சைக்கு
முன்னாலே எதுதான் நிற்கும்?
முறையாகச் சொன்ன தன்பின்,

நெருப்பதனைப் பேருந்தில் ரயிலில் மற்றும்
நெருக்கமுடன் மக்கள்வாழ் இடங்கள் தம்மில்
பெருக்கமுடன் வைத்தேதான் மகிழ்ச்சி கொள்ளும்
பெரும்பாவிக் கூட்டத்தின் நிலையா தென்றால்
செருப்பிடையில் கல்லைப்போல் சிறுமை செய்து
செங்களமாய் ஆக்குகிற சின்னப் புத்தி
உருப்படாத உலுத்தர்க்கே உள்ள தன்றி
உழைப்பதிலும் சோம்பேறித் தனத்தா ரென்றார்!

பயிர்பிடிக்கும் பருவந் தன்னில்
பசுமைநெல் பாழா தல்போல்
அயிர்ப்பில்லா வாழ்வில் புத்தர்
அறுத்திட்டார் ஆசை, ஆனால்
செயிர்ப்பில்லா உயிர்கள் மீது
செலுத்திட்டார் அன்பை! இன்றோ
உயிர்ச்சேதம் செய்வோர்க் கெல்லாம்
உயர்புத்தர் பற்றா உண்டு?

என்றடிகள் கேட்டபோது, சிங்க ளத்தில்
என்றுதீரும் உயிர்ச்சேதம் என்றே எண்ண,
ஒன்றெனக்குள் ஒலித்திட்ட ஓசை கேட்டேன்!
ஒய்யார செல்போனால், ஓயாக் குடியால்
நன்றெனவே உண்கின்ற போதை என்னும்
நஞ்சான மாமருந்தால் ஓட்டும் வண்டி
ஒன்றோடு, ஒன்றாக மோத, அந்தோ!
ஒருசாவா? இருசாவா? நாட்டில் இன்று!

ஒவ்வாத இவைகள் போல
ஒற்றுமையைக் குலைக்க வேண்டிச்
செவ்வையிலா வல்வ ழக்கைச்
செய்தேதான் சாதி என்னும்
தெவ்வான சண்டை யிட்டுத்
தெருநடுவில் வழிம றித்தே
தவ்விவந்து கடைய டைக்கத்
தகராறு செய்வார், என்றார்!

எனுமாறு பலவிதமாய்ச் சொன்ன தெல்லாம்
இதயமிலா மாக்களுக்காம் பண்பே என்று
மனுநீதி அரசனைப்போல் வந்து சொன்ன
மகத்தான வாசகத்தால் மயங்கிப் போனேன்!
முனமவரை எங்கோநான் பார்த்தும் அன்னார்
முத்துரையும் கேட்டதென நினைந்த போது,
"இனுமெம்மை அறியலையோ?" என்று சொல்ல
எழுந்திருந்தேன் ஆழ்நிலையில் அருளா லயத்தே!

# அறிவியல் உறவும் – ஆன்மீக உறவும்

(டாக்டர். கே. பாலகிருஷ்ணன்)

பாகம் - 5

தரிசு நிலங்களை மேம்படுத்தி வேளாண் அடிப்படையில் தொழில்களை வளர்ப்பதில் அடிகளார் அவர்களின் ஈடுபாட்டையும் அணுகுமுறையையும் முந்தைய பாகத்தில் அறிமுகப்படுத்தப்பட்டது. இதைத் தீவிரப்படுத்த குன்றக்குடியிலும் அருகிலுள்ள கம்பனூரிலும் பட்டுப்பூச்சி வளர்ப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. பெருமளவு முந்திரி சாகுபடியும் ஊக்குவிக்கப்பட்டது. பட்டுப்பூச்சி வளர்ப்புத் துறையின் மூலம் கம்பனூரில் 100 ஏக்கர் பரப்பளவிலும், குன்றக்குடியில் 10 ஏக்கர் பரப்பளவிலும் ஆதிதிராவிடர் நலத் திட்டத்தின் கீழ் மல்பர்ரி செடிகள் பயிரிட்டு மாதிரி பட்டு புழுக்கள் தயாரிக்கும் மையமும் அமைக்கப்பட்டது. இத்திட்டத்தை ஒருங்கிணைந்து செயல்படுத்தும் வகையில் பட்டு நூல் தயாரித்தல், ஆடைகள் தயாரித்தல் என்ற அடிப்படையில் முழுமையான திட்டம் வகுக்கப்பட்டது. முதற்கட்டமான "கொக்கூன்" வளர்க்கும் முறை சிறப்பாக செயல்பட்டது. ஆனால் நாளடைவில் விவசாயிகள் நாட்டமின்மையால் இத்தொழில் வளரவில்லை.

பெரியார் முந்திரி தொழிற்சாலையில் வண்ணங்கள் தயாரிப்பதைப் பற்றிக் குறிப்பிட்டோம். அதற்கு வேண்டிய முக்கியமான மூலப் பொருட்களில் ஒன்று "Dehydrated Castor Oil" (DCO) அதாவது கச்சா ஆமணக்கு எண்ணெயிலுள்ள நீரை நீக்கிவிட்டால் இந்த ஆமணக்கு எண்ணெய் DCO என்று அழைக்கப்படுகிறது. இது சோப்பு தயாரித்தல், வாசனை எண்ணெய், மருத்துவம், பிளாஸ்டிக் மற்றும் பெயின்ட் போன்ற தொழில்களில் முக்கிய மூலப்பொருள் ஆகும். பெயின்ட் தொழிற்சாலைக்கு DCO மும்பையிலிருந்து தான் வந்துகொண்டிருந்தது.

திட்டக்குழு கூட்டத்தில் இச்சிந்தனை உருவாகியது. தென் மாவட்டங்களில் அதிக அளவு ஆமணக்கு பயிரிடப்படுகிறது. கச்சா எண்ணெயும் ஓரளவு உற்பத்தியாகிறது. DCO தயாரிக்கும் தொழிற்சாலையை ஏன் இப்பகுதியில் அமைக்க முயற்சிக்கக்கூடாது என்ற வினா திட்டக்குழு கூட்டத்தில் எழுப்பப்பட்டு விடைகளும் விரைந்து கிடைத்தன. தற்போதுள்ள ஆமணக்கு உற்பத்தி போதிய அளவு இல்லை. ஆனால் தீவிர சாகுபடியின் மூலம் இதை சரிசெய்துவிடலாம். வேளாண்மை துறையை அணுகுவது என்று தீர்மானிக்கப்பட்டது. கச்சா எண்ணெயில் நீரை பிரித்தெடுக்கும்

தொழில்நுட்பம் தேவை. இதை ஹைதராபாத்தில் உள்ள பிராந்திய ஆராய்ச்சிக் கழகம் மூலம் பெற்றுவிடலாம். நீண்ட காலம் விளையக்கூடியதாகவும் அதிக விளைச்சலை தரக்கூடியதுமான ஆமணக்கு விதையை தேர்ந்தெடுக்க வேண்டும். இதற்கு ஆனந்தபூரில் எண்ணெய்வித்து ஆராய்ச்சி நிலையத்தை அணுகுவது என்று தீர்மானிக்கப்பட்டது.

இவை அனைத்தையும் செயல்படுத்த ஒரு ஆலோசனைக் குழுவும், தொழிற்சாலையை கூட்டுறவுத் துறையில் அமைப்பதற்கான குழுவும் அமைக்கப்பட்டன.

ஒருவர் மந்தமாகவோ விரைவாக முடிவுகள் எடுக்காமலோ இருந்தால் "அவர் ஒரு விளக்கெண்ணெய்" என்று குறிப்பிடுவது உண்டு. ஆனால் அந்த விளக்கெண்ணெய் என்ற ஆமணக்கு எண்ணெயில்தான் எவ்வளவு வேதியியல் பொருட்கள் அதுவும் பல்வேறு முக்கியப் பணிகளுக்கு பயன்படும் பொருட்கள் அடங்கியிருக்கின்றன! "இதைப் பற்றி அறிக அறிவியலில் ஒரு கட்டுரை வெளியிட உள்ளோம்"

கச்சா ஆமணக்கு எண்ணெயிலிருந்து கீழ்க்கண்ட வேதியல் பொருட்களைத் தயாரிக்கக்கூடிய தொழில்நுட்பங்களை ஹைதராபாத்தில் உள்ள "இந்திய வேதியல் தொழில்நுட்பக் கழகம்" (முன்பு பிராந்திய ஆராய்ச்சிக் கழகம் என்று அழைக்கப்பட்டது) கண்டறிந்து வியாபார ரீதியில் உற்பத்தி செய்யக்கூடிய தொழில்நுட்பங்களையும் தந்து வந்தது.

உராய்வைக் குறைக்கும்"பசைகள்", துணிகள் தயாரிப்பில் பயன்படுத்தப்படும் "சைஸிங்" என்ற பொருள், பூச்சிக் கொல்லிகள் ஆகியவற்றில் பயன்படுத்தப்படும் "சோப்புகள்" சிறப்பு வண்ணங்கள் தயாரிக்கும் தொழில்களில் பயன்படுத்தப்படும் "எஸ்டர்ஸ்" திரவ மெழுகுகள் தயாரிக்க உதவும் "ஆல்கஹால்" தோல் பொருட்களுக்குக் கொடுக்கக்கூடிய பூச்சுகள் தயாரிக்க உதவும் "ஹைட்ரிஜனேட் ஆமணக்கெண்ணெய்" வண்ணப்பூச்சுகளில் திடப்பொருளாகப் பயன்படுத்தப்படும் "டி ஹைட்ரேடட் ஆமணக்கு எண்ணெய்" நைலான் மற்றும் வாசனைப் பொருட்கள் என்று பலவிதமான பொருட்கள் தயாரிக்கக்கூடிய எண்ணற்ற வேதியல் பொருட்கள் தயாரிக்க ஆமணக்கு எண்ணெய் பயன்படுகிறது.

இதனால் அயல்நாடுகள் நம் நாட்டிலிருந்து கச்சா எண்ணெயை இறக்குமதி செய்து நூற்றுக்கு மேலான வேதியல் பொருட்களை ஆமணக்கு எண்ணெயிலிருந்து தயாரித்து நம் நாட்டிற்கு விலை உயர்ந்த பொருட்களாக திரும்ப அனுப்புகிறார்கள்.

ஆமணக்கை பெருமளவில் நம் பகுதியில் பயிரிட்டு, கச்சா எண்ணெயின் உற்பத்தியைப் பெருக்கி, அதிலிருந்து முதல் கட்டமாக சில வேதியல் பொருட்களை தயாரிக்க திட்டக்குழு தீர்மானித்தது.

இதற்கான ஆலோசனைக் கூட்டம் 11.02.1992 அன்று குன்றக்குடியில் நடைபெற்றது. IICT - ஹைதராபாத்திலிருந்து திரு. M. வாகிது தீன் மற்றும் முனைவர் K.G.S. மூர்த்தி என்ற இரு விஞ்ஞானிகள் பங்கு பெற்றார்கள்.

முதல்கட்ட வேதியல் பொருட்கள் தயாரிக்க 1500 டன், இரண்டாவது கட்டத்திற்கு 20,000 டன் ஆமணக்கு விதை தேவை என்று கணக்கிடப்பட்டது. தொழில் நுட்பங்கள் IICT - ஹைதராபாத்திலிருந்து பெறுவது என்று தீர்மானிக்கப்பட்டது. தொழில் வளாகத்திற்கு 15 ஏக்கர் நிலம் தேவை என்றும் இதை சிவகங்கை, பரமக்குடியில் மாவட்ட ஆட்சியர் உதவியால் பெறவும் தீர்மானிக்கப்பட்டது. விரைவில் வல்லுநர்கள் குழு ஒன்று ஹைதராபாத்திற்குச் சென்று IICT இயக்குநர் அவர்களைச் சந்தித்து தொழில்நுட்ப பரிமாற்றத்தைப் பற்றி பேசுவது என்றும் முடிவு எடுக்கப்பட்டது.

இதற்கிடையே அண்டை மாவட்டங்களில் உற்பத்தியாகும் ஆமணக்கு விதை கணக்கு எடுக்கப்பட்டது. தொழிலகத்தை சிவங்கையில் கூட்டுறவு முறையில் அமைக்க 10 ஏக்கர் அரசு புறம்போக்கு நிலம் நீண்டநாள் குத்தகை அடிப்படையில் ஏற்பாடு செய்யப்பட்டது.

1994 ஏப்ரல் மாதத்தில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்ட ஆமணக்கு தொழில் நிர்வாகக் குழு மாவட்ட ஆட்சியர் தலைமையில் அமைக்கப்பட்டு வேளாண் பல்கலைக்கழக துணை வேந்தர், துணைத் தலைவராகவும் மற்றும் அரசு, வங்கி அலுவலர்கள் உறுப்பினர்களாகவும் இருந்தார்கள். முதற் கூட்டம் செக்ரியில் நடைபெற்றது.

வேளாண்மைத் துறையிலிருந்து இப்பகுதியில் சாகுபடி செய்து நல்ல மகசூல் தரக்கூடிய இரகங்களின் விவரம் தீவிர சாகுபடி செய்யும் முறை பெறப்பட்டது. மேலும் மூன்று கட்டங்களில் பலவிதமான வேதியல் பொருட்கள் தயாரிக்க 60,000 டன் விதை தேவை. உற்பத்தி செய்ய 1.5 இலட்சம் ஏக்கரில் ஆமணக்கு சாகுபடி செய்யவேண்டும்.

இந்தத் தொழிலகத்தில் குறைந்தது 500 பேருக்கு நேர்முகமாகவும், விவசாயத்தின் மூலமாக இன்றும் பல நூறு பேர்களும் பயன் அடைவார்கள் என்ற புள்ளி விவரங்கள் பெறப்பட்டது. நமது மாவட்டத்திலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக்கூடிய தொழிலாகவும் எண்ணப்பட்டது. அனைத்து தொழில்நுட்பங்களையும் செயற்படுத்த 6 கோடி ரூபாய் தேவை என்று கணக்கிடப்பட்டது. 94-95 ஆம் ஆண்டு ஆரம்பித்து 97-98க்குள் முடிப்பதாக திட்டமிடப்பட்டது. காலக்கெடுவை சந்திக்க உடனடியாக இயந்திரங்களின் விலை மதிப்பு பெறப்பட்டது.

தொழில்நுட்பங்களைப் பற்றியும் அதை IICT நிறுவனத்திலிருந்து பெறக்கூடிய வாய்ப்புகளைப் பற்றியும், IICT இயக்குநர் முனைவர் ராமராவ் அவர்களிடம் தேதி குறிப்பிட்டு அடிகளார் அவர்களும் நானும் செல்வதாக இருந்தது. குறித்த நாளில் நான் செல்ல இயலவில்லை. செக்ரியிலிருந்து முனைவர் திருநாவுக்கரசு சென்று வந்தார்கள். வேளாண்மை - வேதியல் தொழில் ஒருங்கிணைந்த இத்தொழில் திட்டத்தை ராமராவ் பாராட்டி உடனடியாக தொழில்நுட்பங்களுக்கு தான், பொருட்கள் தயாரிக்கக்கூடிய தொழில்நுட்பங்களை இலவசமாகத் தருவதாகச் சொல்லி இருவரும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார்கள். வங்கிக்குக் கொடுக்கக்கூடிய முழுமையான தொழில் திட்டத்தையும் தனது விஞ்ஞானிகள் தயார் செய்து கொடுப்பார்கள். சந்தைக்கு வேண்டிய இணைப்புகளையும் (Tie-Ups) செய்ய முயற்சிப்போம் என்று கூறினார்கள்.

1994-95ஆம் ஆண்டு பலமுனைகளிலும் ஏற்பாடுகள் விரைவாக நடந்து கொண்டிருந்தது. உடல்நிலை சரியாக இல்லாத காலத்திலும் கூட்டங்களுக்கும் வல்லுநர்கள் சந்திப்பிற்கும் ஏற்பாடு செய்து அடிகளார் அவர்கள் வழிநடத்தி வந்தார்கள். இருப்பினும் காலம் அவரைக் கடைசியில் வென்றது. 1995-ல் அவர் இறைவனடி சேர்ந்தார். மாபெரும் தொழிற்சாலை நமது மாவட்டத்தில் வருவதும் பின்னடைந்தது.

அப்பொழுது இளவரசாக இருந்த நமது அடிகளார் அவர்களுடனும் என்னுடனும் மருத்துவமனையில் பேசிக் கொண்டிருந்தபோது "கனவுகள் பல இருந்தன; நிறைவேறின ஒரு சிலவே" என்று நீர் மல்க கூறியபோது இத்தொழிற்சாலையும் நிறைவேறாத கனவுகளில் ஒன்றாக இருக்கும் என்று தோன்றவில்லை. இக்கட்டுரையை முடிக்கும்போது அது கண் முன் வருகிறது. அவருடைய மனோ வேகத்திற்கும், செயல்பாட்டு வேகத்திற்கும் ஈடுகொடுத்திருந்தால் அவருடைய இந்தக் கனவும் நினைவாகி இருக்குமே என்ற வருத்தம்-ஆதங்கம் இன்றும் மனதை அழுத்துகிறது. தொழிற்சாலை அமைய உதவாமல் வெறும் கட்டுரையோடு முடிகிறதே!

இன்று தரிசு நில மேம்பாடு என்று பல திட்டங்கள் வந்துள்ளன. ஆனால் 15 ஆண்டுகளுக்கு முன்பு 1.5 இலட்சம் ஏக்கரில் ஆமணக்கு சாகுபடி செய்து கிராமங்களில் வேளாண்மை வளம் பெறவும், பெருமளவில் வேலைவாய்ப்பு கொடுக்கக்கூடிய தொழில்களை நிறுவவும் இவற்றின் மூலம் பகுதி மேம்பாட்டிற்கும் தனி மனிதனாக தலைமை தாங்கி வழிகாட்டி, செயலாற்றிய பெருமை தவத்திரு அடிகளார் அவரைச் சாரும். அவர்களுடைய தீர்க்க தரிசனத்திற்கும், திறமைக்கும், முன்னேற்ற சிந்தனைகளுக்கும் பக்க பலம் இருந்திருந்தால் தமிழ்நாட்டையே வளமுள்ள நாடாக மாற்றி இருப்பார் என்பதில் ஐயமில்லை.

—

# சிந்தனை வட்டம்

"இத்திங்கள் மக்கள் சிந்தனை" இதழில் தேம்ஸ் ஆற்றின் பின்புலத்தில், நம் வணக்கத்திற்குரிய குருமகாசந்நிதானம் அவர்களையும், பேரூர் அடிகள் பெருமான் அவர்களையும், நாவரசர் சத்தியசீலன் உள்ளிட்ட தமிழ்ச்சான்றோர்களளையும் கண்டு பெரிதும் மகிழ்ந்தேன்.

குருமகாசந்நிதானம் அவர்களின் கைவண்ணத்தில் உருவான கட்டுரை, முதல் வரியிலேயே அவர்களது தனிமுத்திரையுடன் ஒளிர்கிறது. தேம்சு ஆற்றங்கரையைக் கண்ணுற்றதும், ஷேக்ஸ்பியரின் நினைவு வருவது, அடிகளாரின் உள்மனதில் தலைக்காவிரியாக ஊற்றெடுக்கும் இலக்கிய ஆர்வத்திற்கு ஆவணமாக அமைகிறது. தெளிந்த விசால வானப்பார்வை, எத்துணை தொலைதூர வாழ்க்கையனுபவத்தை வெளிப்படுத்துகிறது? 50,000 அடி உயரத்திற்கு மேலும் புரட்சிக்கவிஞனின் கவிதை கோலோச்சுகிறதே! ... இந்திய நேரத்தைவிட 5 மணி நேரம் பின்தங்கியவர்கள் வாழ்க்கைப் பொருளாதாரத்தில் இந்தியாவைவிட எத்தனை மணிநேரம் விரைவாக முன்னேறிவிட்டார்கள் என்ற சிந்தனை நம் நெஞ்சை உலுக்குகிறது.

பிரிட்டன் நாட்டுக் கோடைகாலச்சூரியன், நம் அறிவாலயத்து உதயசூரியனுக்கு உவமமாக அமைவது, உவகைக்குரியதே! இந்தியாவின் தலைநகரை இலண்டனிலிருந்து தில்லிக்கு இடமாற்றம் செய்த மகாத்மாவைச் சத்தியத்தின் சத்தியம் என்று குறிக்கும் சொல்லாட்சித்திறன் நம் அடிகளார்க்கே உரிய திறன்.... காந்தியடிகளைத் தேவமைந்தனாய்ச் சித்திரிக்கும் கைவண்ணமும், நம் குருமகாசந்நிதானம் அவர்களுக்கே அமைந்த தனியுடைமையே...

பீரங்கியாலும் வெடிமருந்துகளாலும் வெல்லமுடியாத வெள்ளையர்களை, அகிம்சை ஆயுதத்தால் புறம்கண்ட பொக்கைவாய்க்கிழவன் பற்றிய சொற்சித்திரம், ஒப்பற்ற உணர்ச்சி ஓவியம்.

இரும்புச் சங்கிலியின் வலிமையை உடைத்தெறிபவர்களை, கைராட்டையின் சின்ன நூற்கண்டு சிறைப்படுத்திய வரலாற்றுச் சிறப்பை உணர்வுபூர்வமாக நினைவூட்டியுள்ளது கட்டுரை.

இற்றைநாளில் இலண்டன் நகருக்குள் கால்பதித்த எந்த இந்தியப் பயணியும், இத்துணை நெகிழ்வோடு நாட்டுத்தந்தையை நினைவுகூர்ந்ததில்லை. இத்தகைய ஒரு மகோன்னதமான புனிதமகனின் திருவடித்தீட்சை பெற்ற புண்ணியம் பெறுகிறது இலண்டன் மாநகரம்... கணேசமூர்த்தியின் இல்லம் சிறியதுதான். ஆனால் விசாலமனம் படைத்தது. அதைப்போல் கட்டுரை சிறியதுதான். ஆனால் அதனுள் பொதிந்துள்ள பொருட்செறிவு மிக்க விசாலமானது.

**–அய்க்கண்**, காரைக்குடி.

ஐயா அவர்களின் இலண்டன் பயணம் குறித்த தலையங்கம் மிகச் சிறப்பாக – பயனுள்ள தகவல்களுடன் பரவசம் ஏற்படுத்தியது. இருவரே இருப்பினும் வரிசையில் நிற்கும் அவர்களின் சீரிய ஒழுங்கு முறை நமக்கு ஒரு பாடம். இறுதியாகக் குறிப்பிட்டவாறு நம் சமய உலகின் பாதை நிச்சயம் தெளிவுபெறும். அதற்கென உழைப்போம்.

**– சுப்பிரமணியன்**, திருப்பூர்

வானூர்தியில் கடந்து போய் தேனமிழ்த உரையால் தேம்சு ஆற்றங்கரையில் வசிக்கும் வண்டமிழர்க்கு மகிழ்வூட்டி வந்தது பற்றிய தலையங்கக் கட்டுரை சுவைச் செய்திகளை வாரி வழங்கி உவகை விருந்தளித்தது.

எல்லோர்க்கும் இனியவரான தங்களின் இதுபோன்ற அற்புதப் பணிகள் எதிர்கால வரலாற்றில் ஏறிநிற்கப் போவது திண்ணம். போற்றி மகிழ்கின்றேன். அதே நேரம் இலண்டனின் இன்னொரு பகுதியில் நானும் பங்கேற்று "தமிழ்ப்பேரின்பம்" எனும் தலைப்பில் பேசினேன். "தீபம்" தொலைக்காட்சியிலும் பேட்டி தந்தேன். தங்களை நேரில் காண இயலாமைக்குப் பொறுத்திடுங்கள்.

"இலண்டன் மக்கள் எதிலும் கட்டுப்பாட்டு ஒழுங்குமுறையைக் கடைப்பிடிக்கிறார்கள். ஒருவரை தள்ளிக்கொண்டு முந்துவதில்லை. "இருவர் ஆனாலும் ஒருவர்பின் ஒருவர்தான் நிற்பர்" என்ற நற்பழக்கத்தை வலியுறுத்தியதைப் பாராட்டுகிறேன். அப்படிப்பட்ட கட்டுப்பாட்டு நெறி தமிழரிடம் இருந்தால், நெரிசலில் சிக்கி 40க்கு மேற்பட்டோர் பலியாகி இருக்கமாட்டார்களே!

திரு. சு. செல்வராசு தொகுத்து எழுதியுள்ள தங்கள் பயணம் பற்றிய இனிப்புக் கட்டுரை நாங்களும் தங்களுடன் பயணம் செய்தது போன்ற உணர்வை ஊட்டியது. அவருக்குப் பாராட்டுக்கள்.

ஓங்கட்டும் தங்கள் புகழ்க் கொற்றம்.

-கவிவேந்தர். **வேழவேந்தன்**, சென்னை

நம் அடிகள் பெருமான் எழுதிய இலண்டன் பயணம் பற்றிய எழுத்துக்கள் தீஞ்சுவையாக இருந்தன. இதுபற்றிய வாசகர் வட்ட மதிப்பீடாகக் கீழ்வருவனவற்றை இதழுக்கு அனுப்பலானேன்.

தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகள் எழுதிய இலண்டன் பயணக் கட்டுரை தேனாய் இன்னமுதாய்த் தித்திக்கும் சிவபெருமான் என்ற மணிவாசக அனுபவத்தைப் படிப்போருக்குத் தந்து அவரவரும் இலண்டன் போய்வந்தது போன்ற உணர்வைத் தூண்டியது.

கட்டுரையின் தொடக்கத்தில் சமயத் தமிழுக்குத் தந்த விளக்கம் அருமை. விமானம் பறந்த விதம் பற்றிக்கூறும்போது நாமும் விமானத்துள் இருப்பதுபோல் இருந்தது. 5 மணி நேர வேறுபாடாயினும் உலக நேரத்தைத் தீர்மானிக்கும் ஒழுங்கில் கிரீன்விச் ரேகைபற்றிக்கூறி உலக சூரியனோடு தமிழக உதய சூரியனை (கலைஞரை) ஒப்பிட்ட ஒய்யாரமே ஒய்யாரம்!

தாம் திருவடி பதிக்கும் இலண்டனை நேசிக்க காந்தியைச் சாட்சியாக்கி ஆங்கிலேயரோடு அவருக்கிருந்த உரசல் உறவுகளைச் சுட்டிய மாட்சியே மாட்சி!

கல்லுக்குள் ஈரம்போல் அயலகத்தில் அப்பரை வரவேற்ற ஓர் அப்பூதியாகக் காணப்பட்ட கணேசமூர்த்தியை வாசகர்க்கு அறிமுகம் செய்தது புதிய பெரியபுராணம் எழுதுதற்கான களமாக இருந்தது. இலண்டன் மக்களிடம் கற்கவேண்டியதாகக் கூறிய இலாவகம் கடைப்பிடிப்போர்க்கு இலாபமான எழுத்து.

தட்டச்சில் எங்கு தட்டினும் நடுவில் விழும் எழுத்தைப்போல உலகத் தமிழர் நலங்குறித்த இறுதிப் பாராவில் இலங்கைத் தமிழர்க்குத் தீர்வு வேண்டிய மனித நேயம் ஓர் ஆன்மா படும் துன்பத்தில் மற்றோர் ஆன்மா உதவ முன்வரும் ஆன்ம நேயத்தை நெருடியது. அடிகள் அடிச்சுவட்டில் திருமிகு சு. செல்வராசு அவர்கள் தொகுத்தளித்த செய்திகள் இலண்டனின் சரித்திரப் புகழ்மிக்க ஓர் இனிப்பகத்தின் இனிப்பாக இருந்தன.

மொத்தத்தில் அடிகளின் இலண்டன் பயணம் ஓர் ஆன்மநேயப் பயணம். ஏனெனில் மாநாட்டில் அருச்சகர்பற்றிய சீனிவெடிக் கேள்விக்கு அடிகள் உரைத்த சிவகாசி ஆனைவெடிப்பதில் ஆன்மநேயத்தை நெருடிய அருமை வாசகங்கள் அன்றோ!"

- தமிழாகரர். தெ. **முருகசாமி**, புதுச்சேரி.

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

## *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - September 2006 Price Rs. 3-50
Date of Publication 20-09-2006
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008



பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி) அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166